"STRIVE, STRIVE AND STRIVE AGAIN, IN SPITE OF FAILURES, HAVING THIS HIGH IDEAL TO ENCOURAGE!"

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith.'*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—SPEAK THE TRUTH.

'HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."

EDUCATIONAL AND SOCIAL



அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

"New Series" ஸத்தியமே ஜெயம்—SATYAMEVA JAYATE. "Approved"

புத்தகம். 23.] ராக்ஷஸஃ பங்குனிமீ, 1916ஃ மார்ச்சுமீ [சஞ்சிகை 12.

"STRIVE, STRIVE AND STRIVE AGAIN, IN SPITE OF FAILURES, HAVING THIS HIGH IDEAL TO ENCOURAGE!"

## The Hon'ble Sir Harold Stuart's advice to the Young Men.

The Hon'ble Sir Harold Stuart, while unveiling the portrait of the late Hon'ble Mr. Gokhale at the Tinnevelly Association's Home, Madras, on 8th March 1916, made the following speech pointing out the chief characteristics of the departed patriot and urged the young men to follow Mr. Gokhale's footsteps :—

"It is always a satisfaction to me to do what in me lies to encourage young men who seek inspiration from the life of a very good and great man. I take it that in setting up a portrait in this Association's Home you wish to do something more than to do honour to the memory of Mr. Gokhale for he, alas, is past all earthly honour. I take it that your desire is that his life shall be an inspiration and a stimulus to the young men who find their home here. He himself was greatly inspired by the life of that good and great man whose follower he was always proud to declare himself to be, Mr. Justice Ranade, and many a time he has spoken to me with greatest respect, devotion and affection of that great Judge.

SELF-SACRIFICE.

I would first of all lay stress on his *Self-Sacrifice.* With his high intellectual attainments and his charm of manner, wealth and honour would have been obtained by him in abundance. He put them all aside and deliberately devoted himself to work for his country seeking neither riches nor honour. He was singularly devoid of personal ambition. He was filled with ambition to do public good. His early life was characterised by self-sacrifice that is both rare and highly commendable. Accepting merely a pittance for himself he devoted his capabilities to the public service, first in education and then in a wider field.

GREAT INDUSTRY.

The next quality I should impress upon you is his *great industry.* He recognised that no man could be properly equipped for a public

life unless he was prepared to undergo much toil and labour in acquiring the very necessary detail and complete knowledge. Behind them there were many hours of unremitting toil, much wading through dull official publications, much careful examination of the evidence that he was collecting and preparation of the manner in which he would present it. There was nothing superficial about his work. Those of us who heard him in debate and saw how quick he was in answering a point that had been taken by an opponent, knew how carefully he must have prepared himself for his immediate task. That was characteristic of him in all the work that he did—careful preparation. He knew his subject thoroughly and I commend that very much to the young men in this country who seek a public career. A mere superficial knowledge can never advance a cause. However eloquent, words will not gain success. Behind eloquent words there must ba a complete and detailed acquaintance with the subject.

TRANSPARENT SINCERITY.

The next great attribute that I will mention is his *Transparent Sincerity*, a quality which always struck me very forcibly. He never followed that school which suggests that end justies the means. He recognised that the occasion was not always suitable, that the time was not always ripe, but he was no opportunist in the unfavourable sense of that word. He was always careful, studiously careful, to avoid exaggeration both of statement and of language and the result was when Mr. Gokhale made a statement it received marked attention. One felt in argument with him that he advanced no proposition which he was not fully able and prepared to defend and it is that which does more perhaps than any violence of language, however temporarily successful it may be, to win applause. It is that studied avoidance of exaggeration which really secures success for any cause that is worthy of your attention.

MARKED FAIRNESS.

The last quality I will mention is his *marked fairness* I have spoken on that subject before, but I mention it again this evening because it is a quality which is very often lacking in public men in all countries and it is a quality which gains for a man the respect of his opponents. He never took unfair advantage in debate. It is very often easy to take unfair advantage and for the moment you may gain a fancied success. If ever a man wishes to devote himself to public work, he should not make a few speeches and disappear in public life. He must cultivate a habit of fairness to his opponents and so secure their respect and gain for himself the influence which is of such great value.

THE GOAL AND THE WAY.

I think I have given a sufficiently hard task for the young men of this Association in mentioning these four qualities. If they will follow Mr. Gokhale in his self-sacrifice, his industry, his sincerity and his fairness, they will have gone a great way towards the attainment of the goal that he himself reached. It will, I know, be a very hard example to follow.

"STRIVE, STRIVE, AND STRIVE AGAIN."

Many a young man who earnestly and deliberately sets himself to do so will meet with much disppointmeut, but I hope that with this great example before him he will *strive, strive, and strive again, in spite of failures, having this high ideal to encourage him* and set before himself the life of your great countryman alike in its aims and in its conduct to be "a lamp unto his feet and a light unto his path." (Cheers).

## HOOTING.

A PARABLE FROM THE STREETS.

"The motor horn echoing in naked ugliness through the darkened streets (of London), is a symbol and paragon strident as it is, and hideous in itself, it is perhaps a blast from the trumpet that is to proclaim the resurrection of many slumbering senses and discernments. The sense of proportion in ordinary social life; the power of discerning between what is and what is not tolerable between the individual and the community; an alert sensitiveness to the convenience of our neighbour comparable with that which safeguards our own—who can deny that these were in need of rousing. Who will soberly affirm that even the war is too great a price for their awaking? To die for the glory of one's country and for the slaying of a foul dragon is a great thing; but it is no less a thing to die that better ideals of kindness, civility and unselfishness may prevail in the world. The war and its miseries are to many of us almost intolerable. Yet nothing is more sure than that they will pass. That the war will end, that the miseries and sorrows will fade, that aching hearts will cease to ache, is as certain as that spring will powder the dread-fields of death with living green. But the fruits of a changed and improved ideal of life do not pass; they flourish and spread to an increase beyond human count or imagination. . . . .

It is not only the gross and audible outrage of the motor horn which the times are revealing. There are other forms of hooting, moral and spiritual, which are as prevalent, as unfair, and at least as disagreeable although many of them are inaudible. . . . . And remember that it is in one of only two ways that the nuisance can be abated. We can abstain from offensive hooting; or our horns can be taken away from us."—*The Times.*

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-12

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

ராக்ஷஸ ௵ பங்குனி ௴

# விவேக  சிந்தாமணி

March-April. 1916.

ESTABLISHED 1893

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெந் செயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## HOOTING: A PARABLE FROM THE STREETS

### "கெடுபிடி தடபிடல்"

வழிப்போக்குபாக்கியானம்.

"வழியே யேகுக! வழியே மீளுக!" என்பது பழமொழி. பழமொழி யெல்லாம் வெகு ஜனவாக்கு. வெகுஜனவாக்குச் 'சமஷ்டியில் சபலம்' என்பது நிச்சயம். அப்படி யென்றால் ஈசுவர வாக்குக்கு ஒப்பாகும் என்பது பொருள். இதற்கு எதிராக, "ஆண்டிசொல் அம்பலமேறாது." அம்பலத்தில் வாழ்பவன் அம்பலவாணன். ஆண்டி யென்பவன் ஜன சமூகம் விட்டு நீங்கித் தனியனானவன். "கூட்டோடு கைலாஸம்" யாருக்கும் கிட்டாது. அஃதேபோல் ஜனசமூகத்தோடு ஆண்டானடி யையாதல் அசாத்தியமாகும். ஏனெனில் ஆண்டவன் அடிபணிய ஏகும் வழி 'ஊசி முனை' போலும் கத்திமுனைபோலும் குறுகி இறுகிக் கூராயுள்ளது. அவனவன் தான் பிழைக்கும் வழியைத்தேடி யுழைக்கலாம்: உழைத்தால், உழைப்ப உழைத்த பின், உழைப்பின் பலனாய் ஈசுவரன் அடிபணியப் பெறலாம். ஈசுவரனடி பணியப் பெற்றால் வியஷ்டி பாவம் (ஜீவபாவம்) நீங்கிச் சமஷ்டி பாவம் (ஈசுவர பாவம்) சித்திக்கும். ஜீவேசுவர பேதம் அற்றால் சமஷ்டியில் வியஷ்டியும், வியஷ்டியில் சமஷ்டியும் ஆக விளங்கப் பார்க்கலாம். அப்பொழுதுதான் "ஏகன், அனேகன்" என்கிற இரண்டும் அவனே யாவன். "அவனே நான்" ஆகவும் (சமஷ்டியில் வியஷ்டி பாவனனாகவும்), "நானே அவனாகவும்" (வியஷ்டியில் சமஷ்டிபாவனனாகவும்) விளங்கும் ரகஸியம் அனுபவத்தாலே கண்டறிய வேண்டியதாயிருப்பதால் அதைப்பற்றிச் சொல்வதில் பயனில்லை.

"வழியே யேகுக! வழியே மீளுக!" என்று சொன்னதின் அர்த்தம் என்ன? வழிதப்பிச் சென்றால் விலங்கம் வருமால், வழியே (பெரியோர் சென்ற வழியே—இதற்கு 'ஸ்மிருதி' யென்று பெயர்) லக்ஷியத்தை நாடிச்செல்லுக! சென்று லக்ஷியத்தைக் கண்டனுபவித்தபின், அந்த அனுபவத்திலும் தடுமாட்டம் வரும்: ஆகையால் தடுமாறாமல் சுருதி, யுக்தி, அனுபவம் மூன்றும் பொருந்தப் பொருத்திப் பார்த்து லக்ஷியம் தப்பாமல் தானே வழியோடே மீண்டும் திரும்புக. இதன் உண்மையைப் பெரியோர் வாக்கில் காணலாம்.

"வாசிக்கலாம் பூசிக்கலாம் வாசியேறி வகையறிந்து
ஊசிமுனை யேறி நின்றால்
பேசிக்கலாம் நேசிக்கலாம் போனவழி தானறிந்து
மீளவும் திரும்பக் கற்றால்"

என்றுள்ள சித்தவாக்கினால் "வழியே யேகுக! வழியே மீளுக!" என்பதன் வாக்கியார்த்தம் வெளியாகும். வழியே யேகவேண்டில் பிராணனை வசப்படுத்திக்கொண்டு அதைக் குதிரைபோல் வாகனமாகக்கொண்டு 'ஏறி' அதை நடத்தும் 'வகையறிந்து' ("நாடி வழக்கம் அறிந்து செறிந்தடங்கி" என்பது ஔவை வாக்கு) ஊசி முனைபோல் கூராயுள்ள (அனு

வுக் கணுவாயுள்ள—"அணோரணீயம்") மார்க்கத்தில் நடந்து சென்றால் லக்ஷியத்தைக்கண்டு "வாசிக்கலாம்"--அதாவது "இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பலாம்." "பூசிக்கலாம்"—அதாவது தாதாத்மியமாகக் கலந்து ஒன்றுபட்டு இரண்டற்ற அனுபவம் சித்திக்கப் பெறலாம்.

"ஞானமென்பது மோனவரம்பு" என்று ஔவை வாக்கிருப்பதால் அந்த மோன நிலை விட்டு மனோ மௌனங்கலையாது பேசவும் ஜன சமூகத்தில் கலந்து உறவாடி உள்ளன்பு தூண்டக் கொள்ளும் நேசம் பாராட்டவும் எப்பொழுது சாத்தியமென்றால், அதற்கு விடையாக "போனவழி தானறிந்து மீளவும் திரும்பக் கற்றால்" என்று சொல்லியிருக்கிறார்.

இப்படி வழியே போய் வழியே மீளும் அறிவுக்கு இடையூறு விளைப்பான் எத்தனையோ ஆவரணசக்திகள் வழியில் ஏற்பட்டிருக்கின்றன. அந்த ஆவரணசக்திகள் சோக மோகங்களை யுண்டுபண்ணி யாத்ரியை (வழிப்போக்கனைக்) களைப்பிளைப்பினால் வழியைவிட்டு விலகி யோடச்செய்ய "கெடுபிடி தடபிடல்" செய்வதே தொழிலாயுள்ளன. இந்த ஆவரணசக்திகள் "தேஹோஹம்" என்கிற பாவனைக்குத்தோழர்களாயிருந்து அறிவையழித்து அஞ்ஞானம் விளைப்பதே தொழிலாக வுடையனவாதலால், இவைகளை "அசுரக்கூட்டம்" என்றும் "இருட்சக்தி" "மருட்சக்தி" என்றும் சொல்லுவர் மேலோர். ஆங்கிலத்தில் இந்தச் சக்திகளைச் 'சைத்தான்' என்றும் இவனுடைய சேனைகள் பூதப்பிரேதபைசாச லோகங்களில் வாசம் செய்துகொண்டு நல்வழியிற் செல்லும் மனிதரை இடையூறுகளினால் தடுத்து அவர்களுடைய மனோபலத்தையும் வைராக்கியத்தையும் சோதித்து வருமென்றும் ஐதிகமாகச் சொல்லுவர்.

இப்பொழுது நடக்கும் பாரதப்போரின் நிமித்தமாக லண்டனில் நள்ளிருள் சூழ்ந்ததும் ஜெர்மானியர் ஆகாயரதங்கள் (இவைக்கு "ஜெப்பலின்" என்றுபேர்) ஆகாசமார்க்கமாய் வந்து பட்டணத்தில் வெடிகுண்டுகளைப்போட்டுச் சேதம்செய்ய யத்தனித்து வருவதால், இராத்திரியில் மின்சாரம் முதலிய விளக்கு வெளிச்சங்கள் போடக்கூடாதென்று கண்டிப்பான உத்தரவு பிறந்திருக்கிறது. ஆகையால் லண்டன் தெருக்களெல்லாம் இரவில் வெளிச்சமின்றி இருள் மூடியிருக்கும். இந்த இருள் மூடிய தெருக்களின் வழியே "மோடார் ரதங்கள்" ஓடிக்கொண்டிருக்கும். அவை போகும் போது வழியில் போகிறவர்களை விலக்க வேண்டி கொம்பூதி "கெடுபிடி தடபிடல்" செய்வது வழக்கம். சென்னையில் மவுண்ட் ரோட்டு முதலான ரோட்டுகளிலும் மற்றத் தெருக்களிலும் 'மோட்டார்' வண்டியோட்டும் விமரிசையைப் பார்த்தவர்கள் இருந்திருந்தாப் போல் 'பர்புரு' என்கிற கெடுபிடி சத்தம், ஆந்தையின் கூக்குரல் 'சாக்குரல்' காட்டிக் கேட்பதுபோல் காதில் படுமுன் அதிக தடபிடல் செய்துகொண்டு மோட்டார்வண்டி வழியில் யாரையும் லக்ஷியம் செய்யாமல் "கல்லுளிமுண்டன் போ'றவழி கதவு கிதவெல்லாம் தவிடு பொடி" யென்கிற 'கல்லுளிமுண்டன்' வாக்குக்கு லக்ஷியமாகப் பொருந்தினாற்போல, வழியிலகப்பட்டதையெல்லாம் தவிடு பொடி யாக்கிப் புழுதியைக் கிளப்பிக்கொண்டு போகிறதைப் பார்த்தும் அந்த "கெடுபிடி தடபிடல்" அவசரத்தில் அகப்பட்டுக்கொண்டு 'கதிகலங்க' அநுபவித்தும் இருப்பார்கள். இப்படி மோட்டார் வண்டிசெய்யும் "ஆந்தையின் கூப்பாடு சாக்குரல்" என்பதுபோன்ற "கெடுபிடி சப்தத்தையும், அதனால் வழிப்போக்கர்களுக்கு உண்டாகும் 'உஷார்' தன்மையையும் 'ஜாக்ரதாவஸ்தையையும்' உன்னி இந்தமோட்டார் கொம்பு ஊதும் சத்தமானது செத்தவர் பிழைத்தெழும் பொருட்டுக் கடைசிக் காலத்தில் "ஜாக்ரத ஜாக்ரத:" என்று அடிக்கும் தம்பட்டக் குரலோசைக்குச் சமானமாக அதைக்கருதி, பார'தயுத்தம் காரணமாய் எல்லாரும் தன்ன

யம் மறந்து பொதுநயம்பாராட்டும் குணம் அமையப் பெற்றிருப்பதைக்கொண்டு அது ஸ்வயநயக் குழியில் விழுந்திறந்து கிடந்த ஜீவர்களான ஆங்கிலஜனங்களை "பொதுநயப் பேரொளி வெளிச்சம் புலர்ந்தது ஜாக்ரத ஜாக்ரத:" என்று விழித்தெழச் செய்யும் தம்பட்ட ஓசைக்கு உவமானமாக்கி "வழிப்போக்கபாக்கியானம்" என்று ஒரு உவமை தரிசன சிலாக்கியமான உபகதை (உபாக்கியானம்) எழுதியிருக்கிறார்.

'மோட்டார்'கொம்பூதினால் வழிப்போக்கர்க்கெல்லாம் "வந்தது வில்லங்கம்! விலகியோடுங்கள் அல்லது வழியில் தானே மாண்டு மடிந்து மண்ணோடு மண்ணாய் மறையுங்கள்!" என்று சாவோலை வந்ததுபோல் திகில் உண்டாகி கதிகலங்குவது அனுபவத்தால் யாரும் உணர்ந்தறிந்தது. இப்படிச் சாவோலைக்குவமானமான சப்தம்தானே செத்தோர் பிந்தியெழுந்து தர்மராஜன் முன் ஆஜராக வேண்டுமென்கிற சம்பட்ட ஓசைபோல், ஜனங்கள் உள்ளத்தில் மாண்டு மடிந்துகிடந்த சமஷ்டிபாவ சாதனங்களான ஜீவகாருண்யம், பரோபகாரசிந்தனை, சமஷ்டிசேவை, சமுதாயக்ஷேமம் போன்ற நல்ல பாவங்களைத் தம்பட்ட ஓசையினால் கிளப்புவதுபோல் கிளப்புவதாயிருக்கிறது என்றும், இப்படிப்பட்ட சத்பாவங்கள் உதிக்கச் செய்ய நேர்ந்தது நரபலி வாங்கும் இந்தப் பார'த யுத்தத்தினால்தான் என்றும் சொல்கிறார்.

பகவான் ஜனங்கள் நாலு அவசரங்களில் தன்னை நினைக்கிறார்கள் என்று சொல்லியிருக்கிறார். அதில் ஒன்று, ஆபத்து வேளை ; மற்றொன்று, வியாதி பீடை; மூன்றாவது, மூப்பு; நான்காவது மரணம். ஆங்கிலேய மனோபாவம் ஜடபாவம் மிகுந்ததால் அவர்களுக்கு பாவனாசக்தி மந்தகதி யடைந்திருக்கிறது என்றும், பாவனாசக்தியில்லாவிட்டால் இப்பொழுது பிரமாதமாக வந்துற்ற இந்தப் பார'தப் போரினால் விளையக்கூடிய பிரயோஜனங்கள் கூடப் பத்தில் ஒன்று பலிக்காது போய்விடுமென்றும் கூறுகிறார். ஆகையால் கடவுள் பாவனாசக்தியைக் கொடுக்கப் பிரார்த்திக்க வேண்டும்.

தேசக்ஷேமார்த்தம் பொதுநலத்தை நாடி பேதாள வடிவாயுள்ள பகைவனைக் கொல்ல முயன்று அதில் பிராணனை விடுவது சிலாக்கியம்தான். ஆனால் உலகத்தில் ஜனங்களுக்குள் ஜீவகாருண்யம், பரஸ்பரநேசம் அல்லது ஆசாரோபசார மரியாதைகள், ஸ்வயநயம் பாராட்டாமை அல்லது பரோபகார சிந்தை போன்ற நற்குணங்களில் மேலான லக்ஷியம் உண்டாக வுழைப்பதில் பிராணனை விடுவது அதிலும் சிலாக்கியமாக விருக்கிறது என்பதிற் சந்தேகமில்லை யென்கிறார். ஏனெனில் யுத்தத்தினால் நேரும் கெடுதிகள் அநித்தியமானவை. அப்படி யென்றால் சிறிது காலம் மட்டும் தோன்றிப் பின் மறைந்துபோகும். நல்ல உயர் லக்ஷியத்தில் பதிந்த உத்தமபாவங்களால் உண்டாகும் நன்மைகளோ நித்தியமானவை வரவர விருத்தியாகி வளர்ந்து மனோபாவத்துக் கெட்டாத அவ்வளவு தூரம் அதன் குண மகிமை பரவிப் பிரகாசிக்கும். சண்டையினாலுண்டாகும் துன்பமும் துக்கமும் இதர கெடுதிகளும் என்னதான் கோரமும் கொடூரமுமாயிருக்கினும் காலக்கிரமத்தில் அவை மாறி மறைந்துபோம். சண்டை எப்படியும் ஒரு நாளைக்கு நிற்கத்தான் போகிறது. சவக்காடாயிருக்கும் கோரமான ரணகளம் வசந்தகாலம் வந்ததும் உயிர்க்குவமையான பயிர் பச்சை வர்க்கங்களால் பட்டு விரித்தாற்போல் அழகாக மூடப்பெறும். ஒரு தலைமுறை சென்றால் இப்பொழுது உற்றார் பெற்றார் உடன் பிறந்தாரென்று கொண்டாடும் உறவின் முறையாரை யிழந்து துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கும் சோகம் நீங்கிப்போம். இப்படியாக யுத்த பாதகங்கள் அநித்தியமாய் சீக்கிரத்தில் மாறி மறைந்து போவனவாயிருக்க, உயர்பாவ லக்ஷியங்களால் பிரபலிக்கும் உத்தம சாதனங்கள் வாழையடிவாழை யாகக் கிளைவிட்டுச் செழித்து வளர்ந்து பரவிப் பலனைக் கொடுக்கும்.

இப்படியாகத் தெருவில் நடக்கும் சம்பவங்களில் விசேஷமானதும் அருவருப்பையுண்டுபண்ணத்தக்கதும் "ஆந்தையின் கூக்குரலில் அபமிருத்யு விருக்கிறது" என்கிற ஜன பாவத்துக்கொப்ப மோட்டார் வண்டியின் கொம்பூதும் சப்தத்தில் அபமிருத்யு விருக்கிறதென்று ஜனங்கள் பட்டனுபவித்த அநுபவஞானத்திலிருந்தும் ஆபத்து வேளையான தற்காலத்தில் அஹம்பாவச் செருக்கு அடங்கி பவோபவ சிந்தனை தோன்றியிருக்கும் தருணமான இக்காலத்தில் "அமேத்யத்திலும் அமிருதம் இருக்கிறது" என்றாற்போல அருவருப்புக்கிடமான அபமிருத்யு சின்னமென்று யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட மோட்டார் வண்டியின் கொம்பூதும் சத்தமானது, "பூவுதிரப் பிஞ்சுதிரக் காயுதிரக் கனியுதிர" என்று காருண்ய மிகுதியால் "ஜாக்ரத ஜாக்ரத:" என்று பறையறைந்து கொலைக்களத்தில் தூக்குப் போடுகிற தொழிலிலமர்ந்திருந்தும் ஜீவ காருண்யத்துக்குக் கேடு வராது பரங்கருணை மிகுதியால் பரமசாதகமளித்து, மரண தண்டனை விதிக்கப் பெற்றவர்கள் ஆத்மாவை இழந்து போகாமல் உய்த்தெழும் சூக்ஷ்மம் காட்டி இரக்ஷித்த பரமவெட்டியான உத்தமசிகாமணியைப்போல் ஆபத்துக் காலத்தில் அருமையாயுதிக்கும் பவோபவத்தால் உயர் லக்ஷிய சிந்தையும் உண்மைக்குழைக்கும் உயர்பாவனையும் சித்திப்பது சகஜமென்னும் ஸநாதநதர்ம விசேஷத்தை ஓர் உவமானக் கதையாக ("Parable of the Streets") வழிப்போக்கன் நிலையிலிருந்து வழிப்போக்குபாக்கியானமாக எழுதினவரின் உயர்கலவிசேஷமும் உத்தமபாவமும் சத்துக்கள் எல்லாரும் கொண்டாடத் தக்கதாயிருக்கின்றன. இவருடைய வியாஸம் லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்தூல பாவத்திலிருந்து சூக்ஷ்ம பாவத்தில் ஜனசமூக க்ஷேமத்தை நோக்கி சமஷ்டி பாவகதியடையும் வழியாகிய உத்தமயோக ஸன்மார்க்க நெறியில் தர்மம் தலைகவிழச், சாலையில் மோட்டார் வண்டியோட்டித் திரிகிற அதமர்கள் தங்கள் பணச் செருக்கால் கால்நடையாளிகளையும் வழிப்போக்கர்களையும் அபமிருத்யு சின்னமாகிய மோட்டார் கொம்பூதி கெடுபிடி செய்து தடபிடலாக வண்டியை விட்டடித்துக்கொண்டு போவது போல், சமஷ்டி சேவையாம் உத்தமமான உயர் லக்ஷிய சாதன மார்க்கத்தில் அகம்பாவச் செருக்கால் விக்கிரமம் பாராட்டி அக்கிரமங்கள் செய்து வருகிறவர்கள் மோட்டார் வண்டி யோட்டுகிறவர்கள் அவசின்னமாம் கொம்பூதுவது போலும், ஆந்தை கூவும் அபமிருத்யு சின்னக் குரல்போலும், சமஷ்டி பாவத்துக்குச் சேதமும் அதனால் பொதுஜன க்ஷேமத்துக்கு ஹானியும் செய்கிறவர்களாகிறார்களென்று வெகு அழகாய் உவமான உபமேயங் கூறியெடுத்துக் காட்டியிருக்கிறார். இப்படி அகம்பாவத்தால் "கெடுபிடி தடபிடல்" செய்யும் அக்கிரமஸ்தர்களான "மோட்டார் வண்டி யோட்டுகிறவர்கள் போன்ற" துஷ்டர்கள் செய்கையை சமஷ்டி சேவையில் வழிப்போக்கர்களான சிஷ்டர்கள் அவர்களுடைய உயர் லக்ஷிய உண்மைக்குணபாவத்தால் தீயதை நல்லதாக்கித் தேறுதல் கொண்டு சென்றாலும் அவர்கள் அபமிருத்யு சின்னமா யிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை யென்று முடிவு கட்டி யெழுதியிருக்கிறார்.

இந்த அபமிருத்யு சின்ன ஆபாச ஆர்ப்பாடங்களைக் குறைக்க அஹம்-புறம் என்றுள்ளதைப் பற்றி நிற்கும் இரண்டே வழிகளுண்டு. ஒன்று, அகம்பாவச் செருக்காளர்

விவேகம் பெற்று தங்கள் ஆபாச ஆர்ப்பாடங்களைச் செய்யாதிருத்தல். மற்றொன்று, அவர்கள் "கெடுபிடி தடபிடல்" செய்ய வகையின்றி அபமிருத்யு சின்னமாகிய மோட்டார் கொம்புக்குச் சமானமான அஹம்பாவச் செருக்கை யறுத்துப் பறித்துவிடல். இவ்விரண்டு வழிகளில் ஒன்றினால்தான் இது அடங்கல்வேண்டும்.

"அகம்பாவத்தாலே அழிந்தான் துரியோதனன்" என்று மஹாபாரதக்கதை படித்து அதன் பாடத்தை மனதிற் கொண்டவர்கள் "தானே தனக்குப் பகைவனும் நட்டானும்" என்கிற உண்மை யுணர்ந்து தனக்குள் தானே ஆராய்ந்து ஆர்ப்பாடந் தீர்த்து அகந்தையை விட்டு மோட்டார் கொம்பூதலாகிய "கெடுபிடி தடபிடல்" ஆபாசத்தைக் குறைத்து விடுவார்கள். ஜடபாவ மிகுதியால் அகந்தை மேலிட்டு ஆர்ப்பாடம் செய்கிறவர்கள் அகச்செருக்காகிய 'மோட்டார் கொம்பை' அரசர்க்கரசாகிய ஈசுவரன் தன் மாயாசக்தியால் துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலனார்த்தம் பிடுங்கி விடுவார். பாம்புக்கு விஷமுள்ள மட்டும், ஒன்று, அது கடிக்காம லிருக்கவேண்டும்; இல்லாவிட்டால் அதன் பல்லைப் பிடுங்கி விடவேண்டும். அதன விஷத்தைக் கெடுக்க வென்று பாம்பைக் கொல்வதும் பாபத்தொழில் என்பதை மேற்றிசை நாகரிகம பலிந்துள்ளார் அறிவது அருமையாயினும், அவர்களில் உத்தமர்களாயிருப்பவர்கள் ஒருவாறு அறிந்துவருகிறார்கள் என்று காணச் சாதுக்களெல்லாம் சந்தோஷிப்பார்கள். சுபமஸ்து.

## THE HON'BLE SIR HAROLD STUART'S ADVICE TO THE YOUNG MEN.

## கனம். ஸர். ஹாரல்ட் ஸ்டுவர்ட் அவர்கள் ஹிதோபதேசம்.

சென்னையில் திருநெல்வேலியார் சங்கம் என்று ஒன்றிருக்கிறது. அந்த சங்கத்தார் திருநெல்வேலி ஜில்லாவிலிருந்து சென்னைக்கு வரும் மாணாக்கர்களுக்கு விடுதி வசதியேற்படுவதற் கனுகூலமாக திருநெல்வேலியார் ஜாகை (Tinneevlly Home) யென்று ஒரு கட்டடம் வாடகைக்கு வாங்கி அங்கே ஒரு ஹோஸ்டல் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அந்தக் கட்டடத்தில் தானே மாணாக்கர்களுக்கு விடுதிகளும் அமைந்திருக்கின்றன. இப்பொழுது சுமார் 32-மெம்பர்கள் அங்கே தங்கி யிருக்கிறார்கள். இதை மேல் பார்வை செய்து வருகிறவர்கள் திருநெல்வேலியார் சங்கத்தினர். இவர்கள் பரோபகாரமாக ஊதியமின்றி யுழைத்து வருகிறார்கள். இச்சங்கத்துக்கு சென்னைத் துறைமுக சங்கத்தார் ஆபீஸில் வேலையாயிருக்கும் ம-ா-ா-ஸ்ரீ இராமஸ்வாமி அய்யர் அவர்கள் காலஞ் சென்ற மிஸ்டர் கோக்கலே படம் ஒன்றை யளிக்க அச்சங்கத்தின் அக்கிராசனாதிபதியாகிய பாரிஸ்டர் மிஸ்டர் தேவதாஸ் அவர்கள் அப்படத்தை திருநெல்வேலியார் ஜாகையில் வைத்து அதைத் திறக்கும் சடங்கு நடத்த கனம். ஸர். ஹாரல்ட் ஸ்டுவர்ட் அவர்களை அழைத்தார். அப்பொழுது கனம். மிஸ்டர் ஸ்டோன் முதலாக இன்னும் அனேக கனதனவான்களும் திருநெல்வேலியார்களான உத்யோகஸ்தர்களும் வந்திருந்தார்கள். ஸர். ஹாரல்ட் ஸ்டுவர்ட் அவர்கள் மிஸ்டர் கோக்கலே படத்தைத் திறந்தான பிறகு, திருநெல்வேலியிலிருந்து சென்னைக்கு வந்து வாசிக்கும் வாலிபர்கள் தங்கும் ஜாகையில் அவருடைய படத்தை வைக்கத் தீர்மானித்தது ஒரு நல்ல காரிய மென்றும், அவருடைய திருஉருவப்

படத்தை வைத்து அவருக்கு கௌரவம் செய்யும் வழி அவ்வுருவப்படத்தைப் பார்க்கும் தோறும் அவருடைய ஞாபகம் வர அவருடைய குணமகிமைகளைச் சிந்தித்து அவருடைய வழிப்பட்டுழைக்க வாலிபர்கள் கற்றுக்கொள்ள வேண்டு மென்றும், அப்பொழுது தான் அவருடைய உயிர்வாழ்க்கை மணம் பெற்று மணம் வீசும் தன்மையதாகுமென்றும் சொல்லி, அவருடைய குணமகிமைகளில் சில வற்றை வாலிபர்கள் பின்பற்றி நடக்கச் சாதகமாக வெடுத்துரைத்தார். மிஸ்டர் கோக்கலே யவர்கள் பெருமைக்கும் மகிமைக்கும் காரணம் என்ன வென்றால்,

SELF-SACRIFICE.

முதலாவது.— தன்னயம் பாராட்டாது ஊருக்குழைக்கும் உதார குணம் நிறைந்தவராயிருந்தார்.

GREAT INDUSTRY.

இரண்டாவது.—பொது விஷயங்களிலிறங்கி யுழைக்கிறவர்கள், நுணிப்பிலேயும் புத்தி யுடையவர்களாயிருந்தால், அவர்களால் பொதுஜன காரியங்கள் எதுவும்பார்க்க முடியாதென்று அவர் நன்றாயுணர்ந்து, உணர்ந்தபடி நடந்து கொண்டார். "ஊருக்குழைக்கிறேன்" என்று தலைப்படுகிறவர்கள் களைப்பு இளைப்புக்கஞ்சாத உழைப்புடையவர்களா யிருக்கவேண்டும். எதையும் பூராகத்திர ஆராய்ந்துமுடிக்கும் சக்தி யிருக்கவேண்டும். ஒன்றைத் தொட்டால் அதைத் தொடுபிடியாகத் தொட்டுத் தொடர்ந்து விடாமுயற்சியால் "நன்மை கடைப்பிடி" யென்கிற மூதுரை கொண்டுழைக்கத் தயாரா யிருக்கவேண்டும். இதற்குவிசேஷ மனப்பழக்கம் வேண்டும். அந்த மனப்பழக்கத்தோடு கருவி கரணங்கள் சொன்னபடி கேட்டுழைக்கும் உழைப்புக் குணமும் அப்பியாச முதிர்ச்சியினால் அமையப் பெற்றிருக்க வேண்டும். அவர் இராஜப்பிரதிநிதி ஆலோசனை சபையில் ஒரு விஷயத்தை யெடுத்துப் பிரஸ்தாபிக்கத் தொடங்கினாரானால் அதன் விவரங்கள் எல்லாவற்றையும் அதிக திட்பநுட்ப புத்தியோடு ஒன்று விடாமல் ஆராய்ந்து தேர்ந்து தெளிந்த சித்தமுடையவராயிருக்கிற உண்மை அவர் பேசுவதைக் கேட்பவருக்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல் பிரத்தியக்ஷமாகப்படும் என்று சொன்னார். ஆகையால் எதையும் பூரணமாய் ஆராய்ந்து தேர்ந்துதெளிந்து வினைத்தது முடிக்கும் ஆற்றலுக்கின்றியமையா விடாமுயற்சியிருக்க வாலிபர்கள் பழகித் தேறல் வேண்டும்.

TRANSPARENT SINCERITY.

3-வது, அவரிடத்திலுள்ள இன்னொரு சிறந்த குணம் என்னவென்றால் அவருடைய நடையுடை பாவனைகளிலும் பேச்சு வார்த்தை செய்கைகளிலும் அவர் யதார்த்தவாதி, உண்மையாயிருந்து உண்மைக்குழைக்கிற குணமமைந்தவர் என்பது எல்லாருக்கும் ஸ்பஷ்டமாய்த்தெரியும். இது ஸர் ஹாரல்ட் ஸ்வேர்ட் நேரிலறிந்த குணம். இந்த உண்மைக் குணம் பிரத்தியக்ஷமாக விளங்காவிட்டால் "ஊருக்குழைத்தல்" சாத்தியமில்லை. எதையும் உள்ளதுள்ளபடி கூட்டிக் குறைத்து விகாரப்படுத்தாமல் "கறந்தபால் கறந்தபடி" உண்மையாக உரைப்பார். வார்த்தைகளை உபயோகிப்பதில் அர்த்தத்துக்குத் தக்கபடி தன் மனோபாவம் பிறர்மனத் துறுத்தும்படி வார்த்தைகளைப் பொறுக்கி யெடுத்துபயோகிப்பார். மிகைபடக்கூறல் குறைபடக்கூறல் என்கிற சொல் வழுக்கு அவரிடம் சுத்தமாகக் கிடையாது. இதனால் அவருடைய வாக்குச் சக்தி விருத்தியடைந்து பிரபலமாகப் பரவியது. இந்த குணமும் வாலிபர் தங்களுக்கு அமையப்பெறவுழைக்க வேண்டியதே.

MARKED FAIRNESS.

4-வது, அவரிடத்தில் விளங்கிய மற்றொரு விசேஷ குணம் வாலிபர்கள் முக்கியமாய் பழகப் பெறல்வேண்டியது என்னவென்றால், "நடுவுநிலை கோடாமை." அப்படி யென்றால்

எந்த விஷயத்திலும் எதிரியை வெல்லவேண்டி 'வீறுவாதம்' செய்ய நினைக்காமல், எதிரியுடைய பலமறிந்து, குணமறிந்து, மணமறிந்து, அவ்வளவையும் உள்ளபடி ஒப்புக்கொண்டு அதற்காக எதிரியைநன்குமதித்து, அவர் கொள்கை பிசகென்று காட்டுவதில் சிறிதும் விட்டுக்கொடுக்காது நடுவு நிலையில் நின்று நேர் நிறையான தர்க்கவாதம் செய்து உண்மையை உள்ளபடி யாவரும் உணர, எதிரியும் ஒப்புக்கொள்ளத்தக்க விதமாக வெகு விமரிசையாய் எடுத்துரைப்பார். பொதுவிஷயங்களி லிறங்கியுழைக்கிறவர்கள் எப்போதும் எதிரிகளிடம் நடுவுநிலை தவறாது நடந்துகொள்ளப் பழகல் வேண்டும். இந்த உத்தம குணமில்லையேல் அவரது பொதுமுயற்சி பயன்படாதொழியும். ஆதலால், தன்னைக் கொடுத்தல், தீர விசாரித்துத் தேறித் தெளிந்துணர்வதற்கான அபார உழைப்பு, உண்மனக்கு விரோதமின்றி யதார்த்தவாதியாயிருத்தல், எதிரியின் "குண நாடிக் குற்றமு நாடி மிகைநாடி மிக்கக்கொளல்" ஆகிய "நடுவுநிலை கோடாமை" யென்னும் உத்தமகுணம் ஆகிய இவைகள் மிஸ்டர் கோக்கலேயின் விசேஷ குணங்களாயிருந்தன. அந்த குணங்கள் தமக்கு அமையப் பெறவுழைத்தலே அவர் ஞாபகத்தை உண்மையாகக் கொண்டாடலாகும்; ஆகையால் திருநெல்வேலி வாலிபர்கள் இந்த நற்குணங்கள் அமையப்பெற வுழைப்பதற்கு அவருடைய திருவுருவப்படம் அவர்களுடைய ஜாகையில் சோபித்துக் கொண்டிருப்பது அவர்களுக்கு ஓர் பெரிய சாதனமாக வமைந்து இடைவிடாத் தூண்டுகோலாயிருக்குமென்று ஸர் ஹாரல்ட ஸ்டூவர்ட் அவர்கள் செய்த ஹிதோபதேசம் வாலிபர்கள் எல்லாருக்கும் நன்மை பயக்குமென்று இவ்வளவு விரிவாக இங்கெடுத்தெழுதலானோம். இதையெல்லாரும் கவனித்து குணமும் மணமும் பெற முயற்சித் துழைக்கவேண்டும் என்பது நம்முடைய பிரார்த்தனை.

## REFORM OF NATIONAL EDUCATION.

"The broad outlines of a scheme for the reform of our national education which has been sketched in these columns in order to awaken the public to the urgent dangers that beset the economic future of our people, has created widespread interest among professional bodies and has apparently stirred the Government to some form of action.......... We believe that the Government and the Board of Education feel as keenly as educational thinkers outside those charmed circles, that our national system of education stands in need of an immediate revolution. Indeed with 2,000,000 (Two Million) children under the age of seventeen years at this moment running to waste—this is the admission of the Government Blue-books—no sane statesman or administrator could feel otherwise. We therefore hope that the Government will at once appoint a committee of educational experts to examine the position and to report within a fixed period."—"*The Times Educational Supplement.*"

## தேசப்படிப்புச் சீர்திருத்தம்.

நாட்டுப்புறத்தில் வித்யாபோதனை செய்வதில் பாலசிக்ஷை செய்யும் வகையில் சீர்திருத்தங்கள் செய்யவேண்டிய தவசிய மென்பதைப் பற்றி லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் எழுதப்பட்டிருந்ததைக் குறிப்பிட்டு விவேகசிந்தாமணியில் பிரஸ்தாபித்ததன்றி வித்யா இலாகா மந்திரி கனம். ஸர். ஸங்கரன்நாயர் அவர்களுக்கு எழுதிய கடிதத்திலும் அதைப்பற்றியே சொல்லி வற்புறுத்திக் கூறியுள்ளோம். மேலே யெடுத்து அச்சிட்டிருக்கிற சமாசாரத்தால் பிரிடிஷ் கவர்ன்மெண்டார் இது விஷயத்தில் கவனம்வைத்து முயற்சியெடுத்துக் கொண்டிருக்கிறதாகத் தெரியவருகிறது. டைம்ஸ் பத்திரிகையானது கவர்ன்மெண்டார் வித்யா விற்

பன்ன சிரேஷ்டர்கள் சிலரைப் பொறுக்கியெடுத்து ஒரு கமிட்டியாக நியமிக்கவேண்டுமென்று கோருகின்றது. பிரிடிஷ் கவர்ன்மெண்டார் வெளிப்படுத்தியிருக்கும் ரிபோர்ட்டுகள் ரிகார்டுகளால், பதினேழு வயதுக்குள்பட்ட பாலர்கள் 20-லக்ஷம் பேர், தங்கள் இளமைப்பருவம் தற்காலப்படிப்பால் விருதாவாகி வீண்காலப் போக்குச்செய்து வருகிறார்கள் என்று கூறுகிறது. ஆகையால் கவர்ன்மெண்டாரும் வித்யா இலாகா போர்டாரும் இதர வித்யா விற்பன்னர்களைப்போலவே தேசப் படிப்பு முற்றும்சீர்படுத்தப்பெறவேண்டுமென்றும் அதற்கு வித்யாப்பியாஸத்தில் விற்பன்னர்களா யிருக்கிறவர்களைப் பொறுக்கி ஒரு கமிட்டி யேற்படுத்தி விசாரிக்க வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறுகிறது.

கனம். ஸர் ஸங்கரன்நாயர் அவர்களுக்கு அனுப்பியுள்ள கடிதம் அடங்கிய "நாதகீத நாமகள் சிலம்பொலி" யென்னும் புஸ்தகம், இந்தியா கவர்ன்மெண்டு வித்யா மந்திரி இலாகாவில் கவர்ன்மெண்டு உதவி காரியதரிசியாக விருப்பவரால் அவருடைய உத்தரவின்பேரில் வந்தனத்துடன் வரவேற்றுக்கொள்ளப் பெற்றிருக்கிறது. யுத்தம் நடக்கிறதென்று அதைச் சாக்கிட்டுக் கொண்டு வித்யாப்பியாச சிக்ஷை தீக்ஷைகளில் செய்யப்படவெண்டிய சீர்திருத்தங்களை உடனே தேறித்தெளிந்து செய்யாமல் "அப்புறமாகட்டும்" என்று போட்டுவைப்பது யுக்தமா யில்லை யென்றும் சண்டை நடந்து கொண்டிருக்கையிலே தான் ஸமாதான காலத்துக்கு வேண்டிய சீர்திருத்தங்களை முன் யோசனையோடு செய்யவேண்டுமென்றும் வற்புறுத்துகிறது.

**IN MEMORIAM H. O. D. HARDING.**

In loving and ever present memory of Mr. H. O. D. Harding, I.C.S., an officer of long service, honourable repute and sympathy with the people of India. Died 22nd February 1916, at Trichinopoly in the discharge of his duty foully pierced to the heart by the dagger of a fanatic assasin.*

*Requiescat in Pace.*

[The late Mr. H. O. D. Harding was one of that little band of men who had unconsciously outgrown the limits of their own race and become a "citizen of the world" breaking loose the bonds of clime and age and living the life of thought in ethereal regions where Ideals are built up and flourish with luxuriance. He was a keen sportsman and "Seek Truth wherever you can find it" was the illuminating thought which guided the whole course of his life. The death of his Eldest Son, L. C. Harding who fell fighting in the front in Flanders, has entered his soul as iron and left its mark there which his heroic forbearance, while hiding it from vulgar gaze, cannot help revealing itself in all the sacredness of sorrow to the parental heart which has realised the loss of a well-beloved child in the prime of life. The heroism of the mother in this case appealed to one even more than the familiar heroism of the father. The tragic end of his career reminds one of those incidents in History which deprived the world of such stars in the firmament as Lincoln in the Far West and Mayo in the East.]

---

*The following report of the occurrence appeared in the dailies:— At 12-40 P.M., on the 22nd February, Mr. Harding was at the entrance to the Court House, when one Syed Ismail rushed and stabbed him in the chest, the blade of knife entering the lungs and the heart. The man was seized by the Duffadar, but broke loose and again stabbed Mr. Harding inflicting a mortal wound. The assasin was secured and handed over to the Police. . . . . . Mrs. and Miss Harding were at once sent for, but Mr. Harding had breathed his last.

## IN MEMORIAM H. O. D. HARDING.

*(With Apologies to Lord Alfred Tennyson.)*

"REACH OUT DEAD HANDS TO COMFORT ME."

I

Strong Son of God, Immortal Love,
Whom we, that have not seen Thy face,
By faith and faith alone, embrace,
Believing where we cannot prove.

II

Thine are these orbs of light and shade;
Thou madest Life in man and brute.
Thou madest Death ; and lo, thy foot
Is on the skull which thou hast made.
* * * * *

III

Forgive my grief for one removed,
Thy creature, whom I found so fair
I trust he lives in Thee, and there
I find him worthier to be loved.
* * * * *

IV

If, in thy second state sublime,
Thy ransom'd reason change replies
With all the circle of the wise,
The perfect flower of human time.—
* * * * *

V

Just turn thee to the doubtful shore,
Where thy first form was made a man,—
Ah ! I loved thee, Spirit, and love, nor can
The Soul of Shakespeare love thee more.
* * * * *

VI

And see my passion hath not swerved
To works of weakness, but I find
An image comforting the mind
And in my grief a strength reserved.

S. S. S.

## TRANSFUSION COLUMN.

IN MEMORIAM H. O. D. HARDING.

### "எச். ஓ. டி. ஹார்டிங் பிரிவாற்றா இளவலியற்றிய இரங்கற்பா.

*(After Lord Alfred Tennyson.)*

1

குமரனே, குருவே, குஹனே யழியா அன்பே,
சமரில்வெல் வேலாயுதனே யுன் திருமுக தரிசனம்
எமக்கிலையாயினும் பக்தியா லுன்னைப் பற்றினேம்
எமக்குக்குமரனு முனையலாற் குருவே றிலையால்.

2

மும்மண் டலமுநீ படைத்தனை படைவேலா !
எம்மண் டலமுளமன்பதை மிருகமுடை யுயிரும்
இம்மண் டலமுளகாலனும் உன்னால் உயிர்த்தனர்!
அம்ம ! நீ தாங்கியவேலினால் காலனும் சாய்வனே !

3

அண்ணலே எனைவிட் டகன்றன னென் றுநான்
கண்ணிலேநீர்சொரியப்படுதுயர மாற்றிப்பொறுப்பாய்!
எண்ணிலே எனைப்பிரிந்தான் உன்னிலே யடங்கினான்
பண்ணிலே யுனைப்பாட அவனுமங்கே யிருந்தனனே!

4

எனைப்பிரிந்தே யுனையடைந்தா னவனு மங்கே
எனைப்பிரிந்துன் னடியாரோ டளவளாவி யிருப்பினுநீ
எனைப்பரிந்தே யன்புகூர்ந் திகநோக்கச் செய்யென்
றுனைப்பரிந்தே யுள்ளன்பால் வேண்டினேன் வேண்டு
[கின்றேன்!

5

கணப்பொழுதென் னிடநோக்கி யுளம்கனிந்தே
கணப்பொழுதில் என்னன்பு மாறாது மாற்றுயரக்
குணப்பெருங்குன்றே யுனையடைந்தான்திருநோக்கால்
கணப்பொழுதென் னுளநோக்கி யுள்ளமுந்தான் பூரிப்
[பச்

6

செய்துபினும் என்னாசை யென்னன்பு மிளப்பமுறா
தெய்துவகை தான்காட்டி யுன்னாசை யுன்னன்பால்
மெய்துலங்கச்செய்துமன விருள்தானும் போக்கியருள்
பெய்துள்ளத் துயரிலுமோ ருயர்பாவத் திடனளிப்பாய்.

## THE LATE Mr. H. O. D. HARDING, I. C. S.

## மாஜி எச். ஓ. டி. ஹார்டிங் துரை.

திருச்சினுப்பள்ளி டிஸ்திரிக்ட் அண்டு ஸெஷன்ஸ் ஜட்ஜியாக விருந்த மிஸ்டர் எச். ஓ. டி. ஹார்டிங் அவர்கள் பிப்ரவரிமீ 22உ செவ்வாய்க் கிழமையன்று மத்தியானம் கோர்ட்டுக்குவந்து வண்டியை விட்டிறங்கி குதிரையைத் தட்டிக்கொண்டிருக்கையில் ஒரு முரட்டுத் துலுக்கனல் தாக்கி ஹிருதயத்தில் கத்தியால் குத்திக் கொன்று விடப்பட்ட பரிதாபமான சமாச்சாரத்தைக்கேட்டுஆருத்துயரிலாழ்ந்தோம். மிஸ்டர் ஹார்டிங் அவர்கள் நன்ருகத் தமிழ் பயிலக்கற்றவர். தமிழில் நன்ருகப் பேசுவார். அவர் மிகவும் யதார்த்தவாதி. தீனதயாளு. யாரோ ஒரு மஹம்மதியன் தன் பெண்டாட்டியையோ வைப்பாட்டியையோ வேறு எவனே இழுத்துப்போக அவளை மீட்டுக்கொடுக்கவேண்டி போலிஸாருக்கும், கலெக்டருக்கும் மனுக்கொடுக்க யத்தனித்துப் பலிக்காமல், ஜட்ஜி ஹார்டிங் துரையைத்தேடி வந்தான். அவர் அவனை கலெக்டரிடம் அல்லது மாஜிஸ்திரேட்டிடம் போய் புகார்செய்து கொள்ளும்படி சொல்லி யனுப்பினர். அவன் கேளாமல் அவரைத் தொந்திரவுசெய்ய போலீஸார் அவனைப்பிடித்து காவலில் வைத்திருந்ததாகவும் ஜட்ஜி துரை அவனை அனுவசியமாகக் காவலில் வைக்கவேண்டாமென்று அபிப்பிராயப்பட்டதின்மேல் விட்டுவிடப்பட்டானென்றும் வதந்தி யுலாவுகிறது! பிப்ரவரிமீ 22உ செவ்வாய்க் கிழமையன்று சதிபாதகன் கோர்ட்டில் பதுங்கியிருந்து ஜட்ஜி துரை கச்சேரிக்கு வந்த சமயம்பார்த்து அவரைக் குத்திக் கொன்றுவிட்டான். ஒரு முரடன் காமவெறியால் மதிமயங்கி, தங்கமான மனுஷரை அநியாயமாகக் கொன்றுவிட்டான். மிஸ்டர் ஹார்டிங் துரையை நாம் 20-வருஷத்துக்கு மேல் நன்ருக அறிவோம். "விவேக சிந்தாமணியுத்த காண்டத்துக்கு" அவர் முன்னுரை யெழுதிய பின் சென்ற வருஷம் நாம் அவரைப் பார்க்கவென்று திருச்சினுப்பள்ளி போயிருந்தோம். அவருடைய குண விசேஷங்களையும் தர்ம சுபாவத்தையும் பற்றி நாம் என்ன சிலாகித்து எழுதினும் அவருக்குப் பொருந்தும். அப்படிப்பட்ட நல்ல மனுஷரை வெறி முண்டன் ஒருவன் வீணே கொலை செய்து விட்டான். ஈசன் செயல் இருந்தவாறென்னே! அவருடைய பத்தினியாரும் குழந்தைகளும் அவரையிழந்து தவிக்கும் இத்தருணத்தில் உபசார வார்த்தைகள் ஒன்றும் பலிக்காது. கடவுள் தான் அவர்களுக்கு அருள்புரிந்து தேறுதல் உண்டாகச் செய்யவேண்டும். "அடிக்கும் ஒரு கை அணைக்கும் ஒரு கை" என்பது கடவுள் விஷயத்தில் உண்மையே யென்பதிற் சந்தேகமில்லை. அவருடைய பிரிவாற்ருது அவருடைய பரிச்சயம்பெற்ற ஒரு இளைஞன் இங்கிலீஷில் டென்னிஸன்சி மொழியில் வரைந்துள்ள ஞாபகக்கவியை இச்சஞ்சிகையில் பிரசுரித்து அதன் உட்கருத்தை யெல்லாரும் அறியும்படி அதற்குச்சரியாகத் தமிழ் மொழியில் இரங்கற்பா வியற்றி அதை முன்னேட்டில் பிரசுரித்திருக்கிறேம்.

* [ஆல்ப்ரெட் டென்னிஸன் பிரபு மாக்ஷிமை தங்கிய விக்டோரியா மஹாராணியவர்கள் காலத்தில் கவியரசுப் பட்டம்பெற்று புன்னைசூடிப் பிரகாசிக்கலானவர். அவர் சரித்திரா சிரியராகிய 'ஹாலம்' என்னும் அவருடைய நண்பரின் புத்திரன் கடல் யாத்திரை செய்து கதியடைந்து செல்ல, அவ்விளவலது பிரிவாற்ருது அவருடைய ஞாபகார்த்தம் "In Memorium A.H.H." என்று ஒரு சிறந்தகவி பாடலாயினர், அதில் பிறப்பிறப்பின் குணமறிந்து மணமறிந்து குட்டுமறிந்து ஓதியபாடல்கள் பலவிருக்கின்றன. உண்மைக் குறைவிடமாயுள்ள அப்பாடல்களின் வார்த்தைகளை தன் கருத்துக்கிசையச் சிறிது கூட்டிக்குறைத்து. மிஸ்டர் ஹார்டிங் அவர்கள் My old Friend's son" என்று ஆர்வநிறைந்து அன்பு பாராட்டப்பெற்ற இளஞ்சேய் அவருடைய பிரிவாற்ருது தான்பட்ட ஆருத்துயரை ஆற்றிவைத்த குமரனும் (Son of God) குருபரனுக்கு அர்ப்பணமாக அது தமிழ் செய்யப்பட்டுளது.]

